[29th September 1958

ஏற்றுக்கொண்டு, அந்தப் பயிற்சியை அவைகளுக்கு அளித்து, அவைகளை ஜில்லா தலைமையிடங்களில் வைத்திருக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : குற்றங்களைக் கண்டு பிடிப்பதற்காக நாய்கள் இருக்கின்றன. ஆகையால், தனிப்பட்டவர்களிடம் இதை விட முடியாது.

SRI M. C. MUTHUKUMARASWAMY : பகுத்தறிவில்லாத நாய்களைக் கொண்டு பகுத்தறிவுள்ள மனிதர்கள் செய்யும் திருட்டுகளைக் கண்டுபிடிக்க அவைகளுக்குப் பயிற்சி கொடுப்பதற்குப் பதிலாக, பகுத்தறிவுள்ள மனிதர்களுக்கே நல்ல முறையில் பயிற்சி அளித்து, அவர்களைக் கொண்டே திருட்டுக்களைக் கண்டுபிடிப்பதற்கான நடவடிக்கையை அரசாங்கம் எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நாய்களுக்குப் பகுத்தறிவு இல்லை என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது.

*Fee concessions*

* 615 *Q.*—SRI S. LAZAR (on behalf of Sri T. T. Daniel) : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Christian converts of Scheduled Tribes and Backward Communities are entitled to fee concession?

THE HON. SRI C. SUBRAMANIAM : A pupil belonging to any of the Scheduled Tribes or to any of the communities included in the list of most backward classes will be granted fee concession irrespective of his religion while a pupil belonging to any of the other backward classes who is in receipt of a fee concession shall not be deprived of it, if he becomes a convert to any other religion while holding the concession.

SRI A. V. P. ASAITHAMBI : இம்மாதிரி புத்த மதத்திற்கு மாறியவர்களுக்கும் தற்போது சம்பளச் சலுகை வழங்கப்படுகிறதா ? அல்லது வழங்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நம் ராஜ்யத்திலே யாரும் புத்த மதத்தைத் தழுவியதாகத் தெரியவில்லை.

SRI S. LAZAR : மதத்திற்கு அப்பாற்பட்ட ஒரு அரசியலமைப்பைக் கொண்டிருக்கும் நாம், மதத்தின் அடிப்படையிலே இந்த வித்தியாசத்தைக் காண்பிப்பதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மதத்தின் அடிப்படையில் இருக்கும் வித்தியாசத்தை நீக்குவதற்குத்தான் முயற்சி செய்திருக்கிறோம்.

*Minor Irrigation Schemes*

* 616 *Q.*—SRI N. R. THIAGARAJAN (on behalf of Sri P. S. K. Lakshmipathi Raj) : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether the Government intend to execute the following schemes prepared under the Special Minor Irrigation Programme :—

(1) Varadhamanadhi Anicut Scheme in Ayakudi Zamin area, Palni taluk; and

(2) Kudiraiyar Anicut Scheme near Pappanpatti?